# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத – ஆடி– 2015 – ஜூலை

நாச்சியப்ப சுவாமிகள்
கலை அறிவியல் கல்லூரி
கோவிலூர் – காரைக்குடி 630 307
நாட்டு நலப்பணித் திட்டம் (N.S.S.)
(NATIONAL SERVICE SCHEME)

Celebration of International Day of Yoga 19.6.15

37







உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்


மன்மத - ஆடி - 2015 - ஜூலை    இதழ் - 37



சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.


## பொருளடக்கம்




தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

அதிமதுரக் கனிகளுடன் அம்புயப்பொன் தாமரையும்
அழகொளிர விளங்குசமி வனத்தை நாடி
ஆறுதலை உடையசிவன் அடிபணியும் விருப்பினுடன்
அண்டர்முதல் முனிவரர்கள் திரண்டொன் றாக
அணிவகுத்து வணங்கிடுவர் அம்பலவன் அருள்பெறுவர்
அவனுடலில் ஒருபாதி தனக்கே கொண்டாள்
அழகொளிரும் சாலிவனத் தம்மைதிரு நெல்லையவள்
அடிக்கமலம் தொழுதிறைஞ்சி அமைதி கண்டார்

நதிமதுரப் புனல்பொழிய நறவுநதி என்றழைக்கும்
நற்சாலி வயல்நிறைய வழங்கும் அம்மா
நலம்பாடித் திருமுறைகள் நாள்தோறும் ஓலமிட
நங்கையிவள் நம்முளத்தே நிறைந்து நின்றாள்
நற்பவள வயிரமணி மாலைதனை நயந்தணியும்
நம்மன்னை இவளென்றே நாடி வந்தார்
நவ்வியொடு கனல்தாங்கி நலமுடைய வாள்தாங்கி
நலத்தகுமெய்க் கடம்பணிவான் தங்கள் ஈசன்

பதிபொதிந்த வன்னியொடு ஞாழலொடு கொன்றையெலாம்
படர்கழனி வாயிலுறை பாவை நெல்லை
பாலூட்டச் சம்பந்தன் பாடிவைத்த திருமுறைக்குப்
பாடுபொருள் ஆனதமிழ்ப் பங்க யத்தாய்
பாண்டியனின் வாள்மறைத்த சுந்தரன்தன் பதியாகிப்
பார்ப்பாளை வனசமலரப் பாதத் தாளைப்
பார்ப்பாரைக் காப்பாளைப் பரிபுரச்சே வடியாளைப்
பணிவாரைக் காத்தருளிப் பாலிப் பாளைத்

துதிபொதிந்த இசைமாலை பலபாடி நித்தமவள்
துணையடிகள் தொழுவாரின் துரிசு போக்கித்
தூவெள்ளை நீறணிந்து துன்னியிந்த வன்னிவனம்
தோய்ந்துமது நதிபடிந்த தூய சான்றோர்
தோலாத நலம்பெறுவர் தூயமலர் மேனியளைத்
துணையன்பால் இணையன்பர் தொண்ட ராவார்
தூயமணிச் சிலம்பணிவான் தோள்தழுவும் திருநெல்லை
தொண்டுக்குப் பிறந்தாரே தூய ராவார்.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**_சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்_**

இந்த மாதம் நம்முடைய எல்லாக் கல்லூரிகளிலும் தேசிய சேவைத் திட்டங்களைத் (NSS) தொடங்கினார்கள். இதனை முன்னர் அரசாங்கமே முழுச் செலவையும் ஏற்று நடத்தி வந்ததாகக் கூறுகிறார்கள். இப்பொழுது தரக்கூடிய ஆதரவு குறைந்து விட்டதாகவும் ஆசிரியர் பெருமக்கள் கூறுகிறார்கள்.

இந்தத் திட்டம் ஒரு அருமையான திட்டம்; இதன் அடிப்படைக் கருத்து, தங்களைச் சுற்றியுள்ள சூழலையும் தூய்மைப்படுத்தி மக்களுக்கு உதவுவது; அருகில் உள்ள ஏதேனும் ஒரு கிராமத்தைக் குறிப்பிட்டுத் தேசிய சேவைத் திட்டக்குழு(NSS) தத்து எடுத்துக் கொண்டு உண்மையாகவே அந்தக் கிராமத்தினுடைய சுற்றுச்சூழலைத் தூய்மைப்படுத்தி மக்களுக்கு வேண்டிய அடிப்படை வசதிகள் கிடைப்பதற்குத் தங்களுடைய குழுவின் மூலமாகத் தொடர்புடைய அதிகாரிகளைச் சந்தித்து ஏற்பாடு செய்வது, சிறுவர் சிறுமியருக்கு அடிப்படைக் கல்வி நன்னெறிகளைப் போதிப்பது போன்ற சேவைகளைச் செய்வது இதனுடைய நோக்கம் என்று கூறுகிறார்கள். இவையனைத்தும் உயர்ந்த நோக்கங்கள்.

எல்லாவற்றிற்கும் அரசாங்கத்தைச் சார்ந்திருக்காமல் தங்கள் தேவைகளைத் தாங்களே பூர்த்தி செய்து கொள்ள முயல்வதும் பழகுவதும் ஒரு அற்புதமான செயல். இதனை முழுமையாகக் கடைப்பிடித்து நடந்தால்/ நடத்தினால் அந்தக் கிராமம் ஒரு முன்மாதிரியான கிராமமாக மலரும். நம்முடைய மாணவர்கள் இதனைக் கருத்தில் கொண்டு சேவை மனப்பான்மையுடன் செயல்பட வேண்டும்.

பெரும்பாலான சேவை மையங்கள் விளம்பரத்திற்காகவும் குறிப்பிட்ட நபர்களை அடையாளப்படுத்துவதற்காகவும் செயல்படுகின்றன. ஒரு மனிதன் சுயநலத்தைக் கொஞ்சம்

குறைத்துக்கொண்டு பிறர் நலத்திற்காகச் சேவை செய்ய முன்வந்தால் அவனுடைய மனமும் புத்தியும் திண்ணமாகத் தெளிவு பெறும். காலப்போக்கிலே படிப்படியாகச் சுயநலம் குறைந்து சேவை மனப்பான்மை பெருகும் வாய்ப்பு மிக அதிகம். பொருளுக்காகவோ புகழுக்காகவோ செய்யப்படுகின்ற சேவைகள் விரைவிலேயே சாயம் வெளுத்து, குறிப்பிட்ட சேவகர்களின் உண்மைப்புலங்கள் மக்களுக்கு வெளிச்சப்படுத்தப்படும். எனவே உள்ளார்ந்த அன்புடன் தெளிவான மனதுடன் மக்களுக்குச் சேவையைக் கிராமத்திற்கு அளிக்க வேண்டும். சுற்றுப்புறங்களைத் தூய்மையாக்கி நாம் புழங்குகின்ற பகுதிகள் தூய்மையாக ஆரோக்கியத்திற்கு ஏற்றதாக இருக்க வேண்டும்.

தூய்மை செய்யும் போது நம்முடைய மாணவர்கள் கண்ணில்படுகின்ற குப்பைகளைச் சுத்தம் செய்வதைத் தினசரிப் பழக்கமாகப் பழகிக் கொள்ள வேண்டும். நம்முடைய சுற்றுச்சூழல் நமக்கு ஆரோக்கியமானதாக அமைவதற்கு வேண்டியவற்றை நாம் தான் செய்து கொள்ள வேண்டும். செய்வோமாக.

*ஆசிர்வாதங்கள்*

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*


**கோவிலூர் மடாலயத்தின்**

புதிய வெளியீடுகள்

**சிலப்பதிகாரம்** மூலம் **ரூ. 120.00**

**மணிமேகலை** மூலம் **ரூ. 120.00**

தவத்திரு குமார தேவர் அருளிய

## மகாராஜா துறவு (தொடர்ச்சி)

### மந்திரி அரசனின் தன்மையை மக்களிடம் கூறுதல்

113. இந்த உணர்வு நமக்குஇன்னம்
எய்தல் இல்லை நாம்இங்கே
எந்த உணர்வு கொடுநிற்பேம்
என்ன அமைச்சன் யூகித்து
வந்த வழியே தான் திரும்பி
வளப்பம் உடைய மாபுரிக்கே
பந்தம் உடையோர் உடன்இருந்து
பகர்ந்தான் அரசன் இயற்கைஎல்லாம்.

இந்த ஞானம் நமக்கு இன்னும் உண்டாகவில்லை. ஆதலால் நாம் எந்த அறிவைக் கொண்டு இவ்விடத்தில் இருப்போம் என்று எண்ணித் தான் முன்பு வந்த வழியாகவே மாபுரிக்குத் திரும்பிப் போய் அரசனின் உறவினர்பால் தங்கி இருந்து, அரசனின் ஞான யோகத் தன்மைகளை எல்லாம் அமைச்சன் அவர்களுக்குக் கூறினான்.

### அரசனின் உறவினர் வந்து அரசனைக் காண, அவன் பேசாதிருந்தமையால் அவர்கள் திரும்பிச் செல்லுதலும், அரசன் விடு பேறு அடைதலும்

114. கேட்ட பேர்கள் மிகவியந்து
கிட்டாது என்றும் இம்முனிபோல்
தேட்டம் உடனே அவரவர்கள்
தேடி வந்து பணிந்திடவும்
வாட்ட முடனே தாய்தந்தை
மனையாள் பதத்தில் வீழ்ந்திடவும்
நாட்டம் மாறு பாடின்றி
நகைசெய்து இருந்தான் நற்றவனே.

அமைச்சன் கூறியதைக் கேட்ட உறவினர்கள் மிக வியந்து, இந்த முனிவரைப் போல் உயர்ந்தவர் கிடைக்க மாட்டார் என்று மகாராசனைக் காணும் விருப்பத்தோடு அவரவர்களும் தேடி வந்து வணங்கினார்கள். பின் சோகத்துடன் அவனுடைய தாய்,

தந்தை,மனைவி முதலியோர் அவன் திருவடியில் வீழ்ந்தனர். அது கண்டு நற்றவனும் மனம் பிறழாமல் சஞ்சலமில்லாமல் புன்னகை யோடிருந்தான்.

115. வந்த பேர்கள் உடன்வார்த்தை
மலராது இருப்பது அவர் அறிந்து
பந்தம் உடையேம் நமக்குஎன்னை
பகர்ந்தால் தோன்றும் எனத்திரும்பித்
தம்தம் இடத்தில் சென்றார்கள்
தவனும் சிறிது நாள்கழித்துத்
தொந்தம் ஒன்றும் இல்லாத
சுயமாம் முத்தி தான் ஆனான்.

தம்மிடம் அவன் பேசாது இருத்தலை உணர்ந்து, நாம் உலகப் பற்று உடையவர்களாய் இருக்கின்றோம். நமக்கு அவர் ஏதேனும் கூறினால் என்ன புரியப் போகிறது? என்று திரும்பித் தம் இருப்பிடம் சென்றார்கள். அவ்வாறு சென்ற பின் தவத்தோன் ஆகிய மகா ராசனும், சிறிது நாள்வரை அசைவற்ற சமாதியில் இருந்து, தன் வாழ் நாட்களைக் கழித்துப் பின் விருப்பு வெறுப்பு, சுக துக்கம், பாவ புண்ணியம் என இரண்டிரண்டாக உள்ளவற்றின் மேல் பற்று இல்லாத வீடுபேற்றை அடைந்தான்.

## நூற் பயன்

116. இந்தமா ராசன் சென்ற இதிகாசம் தன்னைப் படிப்போர்
சிந்தனை ஒன்றும் இன்றித் தீரவே துறவர் ஆகி
அந்தமும் ஆதி இல்லா அமலமே வடிவம் ஆவர்
எந்தமை அருளின் ஆண்ட எழில்குரு பரையே வாழி.

இந்த மகாராசன் என்ற யோகி வீடுபேறு அடைந்த வரலாற்றினைப் படித்து உண்மையைக் காண்பவர், வேறு உலக நினைவு சிறிதும் இன்றி, துறவுடையவர்கள் ஆகி, முடிவும் முதலும் இல்லாத தூயதான பிரம்மம் தானே என்று அறிவார்கள். எங்களை அருளின் காரணமாக ஆண்டு கொண்ட அழகு பொருந்திய குருவாம் தன்மை வாய்ந்த பார்வதியாகிய பெரிய நாயகி வாழ்க. (தேவி உபாசகர் ஆனபடியால் நூலாசிரியர் குமாரதேவர் அன்னை பெரிய நாயகியை பரையே வாழி என்று வாழ்த்தி முடிக்கிறார்)

**துறவின் உயர்வு**

117. அரியது துறவறம் அல்லது இல்லையால்
மருவிய துறவறம் ஒருவி மன்னனாய்
உருகெழு முடிகவித்து உலகம் ஆள்வது
பெருவிலை மணியினைப் பிண்டிக்கு ஈதலே.

மனிதர்கள் அடைய வேண்டிய அரிய பொருள்களில் துறவறமும் ஒன்று. இதைத் தவிர வேறு ஒன்றில்லை. இதனைக் கைக்கொண்டு முத்தி அடைந்த பெரியோர்கள் துறவறத்தை விட்டு நீங்கி, ஒளிவிடும் முடியைத் தலையில் தாங்கி, உலகை ஆண்டு தன் ஆத்ம சத்தியை வீணாக்குவது விலை மதிப்புள்ள மணி ஒன்றைப் பிண்ணாக்குக்கு ஈடாகக் கொடுப்பதை நிகர்க்கும்.

*மகாராஜா துறவு தெளிவுரை நிறைவுற்றது*

## கோவிலூர் ஆண்டவர் அருளிய சுபாநுபவத் திருவாக்கு (தொடர்ச்சி)

**(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)**

**இறைவணக்கம் - சொரூப வணக்கம்.**

(சொரூபம் என்பதற்கு, வடிவம், சாயல், பாவனை, கடவுள் என சொற்பொருள் கூறப்படுகிறது. சொரூபம் என்பதை பிரம்ம இலட்சணம் என அத்துவிதம் கூறுகிறது. பிரம்ம இலட்சணம் அறிபவன் தன்னை உணர்கிறான் எனும் பெரும் பயன் கிட்டுவதால், பெரும்பாலான சுருதிகள் இதற்கு முதன்மை இடம் தருகின்றன ஒரு காலத்தே இது, மறைக்கப்பட வேண்டும் எனுங்கருத்தில் 'மறை'எனப்பட்டது. அதனையே, 'ஆழப்புதைந்துள்ளதை வெளிக்கொணர்தல்' எனும் பொருளில், ஆண்டவர் போற்றிப் பாடுகிறார். இதில் பிரமத்தை வணங்கிப்பாடுதல் என்பது தனிச்சிறப்பாகும்).

**I வணங்குதல் :**

**"புத்திக்கேதம் தவிர்த்து அடிமை பொருந்த அருள்வாய் புண்ணியனே"**, எனவும், மேலும், **"அந்த மூல முதற்பொருளை அகத்து நாளும் வணங்கிடுவாம்"**, எனவும் முடியும் செய்யுள்கள் உள்ளன.

**II  பிரம்ம உணர்வு கிட்டாமையின் காரணம் :**

மனை, பாசபந்தம், பொருள்களின் சுமை,

**"கங்கே இழுக்கும் வெறும்பிணம் போல்**
**கனகம் மனைவி கால்முளையோடு**
**இங்கே குடும்பச் சுமை இழுப்போர்**
**இதயத்து எட்டா இரும்பொருளே"**

(கங்கு = கழுகு, கனகம் = பொன்/ பொருள், கால் முளை = பிணைப்பு) எனவும், உலகியலை மட்டும் உண்மை எனும் துட்டக் கருத்துடையோருக்கு அது தூரத்தே உள்ளது என்பதாக,

**"துட்டக் கருத்தில் தூரமதாய், தூயோர்க்கு அணித்தாம் தொல்பொருளே"**, எனவும், மேலும்,

**"பொல்லேன் அவிவே கத்தாலே புன்மை**
**விடயமாக்கரைந்தே**
**அல்லற் படுவது உனக்கு அழகோ? அத்தா, அண்ணா**
**ஆரணனே"**

(புன்மை = சிறிய, அத்தா = அப்பா, ஆரணன் = முதல்வன்) எனவும் சுட்டிக் காட்டுகிறார்.

**III பிரம்ம விசாரணை :**

குரு சிரவணம் முடித்த மோட்ச விரும்பி, அவரிடம் கேட்டதைப் பலவாறான கோணங்களில் தனக்குத்தானே ஆய்வு செய்து கொள்ள வேண்டும். இது விசாரணை எனச் சொல்லப்படுகிறது. ஆண்டவர் இதனை,

**"இந்த உகை சராசரங்கள் யாவனிடமாய்த் தோன்றியிடும் ?**
**இந்த உலகை சராசரங்கள் யாவனிடமாய் விளங்கியிடும் ?**
**இந்த உலகை சராசரங்கள் யாவனிடமாய் அடங்கியிடும் ?"**

(சராசரம் = உயிரும் பொருளும் (சரம் + அசரம்) ) எனக் கூறுகிறார். இத்தகைய தொடர் விசாரணை, ஒருவனை பிரம்ம உணர்வுடையவனாக்குகிறது.

**IV பிரம்ம உணர்வு எத்தகையது :**

**'அது ஆலோசித்தது தான் பலவாக ஆவோமென்று எனும் கருத்தில்'**

**"மண்ணைப் புனலை அனல்காலை**
**வானைத் தரு சங்கற்ப சத்தி**
**நண்ணிப் பொருந்து மூன்று அவத்தை**
**நாளும் விளக்கும் சின்மயமே"**

(சங்கற்பம் = எண்ணைக் கரு, மூன்று அவத்தை = ஆக்கல், காத்தல், அழித்தல்) எனவும், **"எட்டுத்திசையோடு அண்டமெலாம் எங்கும் நிறைந்து"** உள்ளதாயும் பாடுகிறார். மேலும் அதனை, **"முத்திக்கு அரசே ஆறாறின் மூலப் பொருளே"** எனவும் (ஆறாறு = 36 அத்துவித தத்துவங்கள்) போற்றுகிறார்.

**"எண்ணற்கு அரிய சித்திரம் ஓர் ஏக படத்தில் இருப்பது போல்"** எனும் குறிப்புத் தருகிறார். (இக் குறிப்பிற்கான விளக்கமாவது : ஒரே சுவற்றில் - ஏக படம் - பற்பல சித்திரங்கள் வரைபடலாம். அவை அழிபட்டு வேறு சித்திரங்கள் ஆக்கப்படலாம். ஆனால் சித்திரங்களுக்கு ஆதாரம் (சுவர் / திரைச்சேலை) ஒன்றே. இதேபோல, பற்பல வகையான உயிர்கள், உலகம், பஞ்சபூதம் எனும் எண்ணற்ற வற்றிற்கு பிரம்மமே ஆதாரமாக உள்ளது, என ஸ்ரீ பஞ்சதசி நூலின் சித்திர தீபப் பகுதி கூறுகிறது.)

அது மனம் மொழிகளுக்கு அப்பாற்பட்டது எனும் கருத்தில்,

**"எல்லாம் இறந்த நிலையாகி ஆனா எனது கற்பிதமாம்**
**எல்லாம் ஆகி அல்லவுமாய் இருந்து விளங்கும் இன்னமுதே"**

(இறந்த = கடந்த, கற்பிதம் = கற்பனை) என்கிறார்.

பிரம்மத்தை,

**"சுட்டும் அறிவு கெட்ட சுக சமன் ஆம் துரிய நிலைமேவி**
**இட்டத்து இருந்த தன்மயத்தோர் இதயாம்பரத்தில் இலங்கு ஒளியே"**

எனவும்,

**"இதயத்து, அங்கு அங்கு இருக்கும் தற்சாட்சி"** எனவும் மேலும்

**"சித்தத்து இருக்கும் சிதாகாச தேவ தேவே"** எனவும் சொல்லி, சிதாகாசத்தை தனது சித்தத்தினுள் காண்பவன் தற்சாட்சி (தானே தனக்கு சாட்சி எனும் பிரம்மம்) ஆகிறான் என்கிறார்.

**V பிரம்மத் தியானம்**

**கீட்கண்ட போற்றுதல் வாயிலாக நிர்குணப் பிரம்மத்** தியானத்திற்கான எடுத்துக்காட்டு கூறப்படுகிறது.

**விண்ஆதி பூதம்எலாம் சிவமே ஆகும்**
**மெய்உருவும் பொய்உருவும் சிவமே ஆகும்**
**கண்ஆன வேதம்எலாம் சிவமே ஆகும்**
**கருதுகின்ற நினைவெல்லாம் சிவமே ஆகும்**
**எண்இறந்த பேதம்எலாம் சிவமே ஆகும்**
**இப்படியே தினம்தோறும் காண்பானாகில்**
**பெண்ஆணாம்அலியாகும் பேதம் இன்றிப்**
**பிரமமயம் ஆதல்திண்ணம் பேதம் இன்றே.**

சிவனுக்கும் திருமாலுக்கும் வேறுபாடின்மைக்கென, **'சிவ விட்டுணு அபேதம்'** கூறுதல் போல, அனைத்தும் ஒன்றே என்பதாக இங்கு **'சிவப்பிரம்ம அபேதம்'** கூறுகிறார் எனலாம்.

இப்பாடல், நிர்குணப் பிரம்மத் தியானத்திற்கு எடுத்துக்காட்டு ஆகும். இத்தகைய தியானம் அத்துவிதச் சிறப்புகளுள் ஒன்று.

பிரம்ம இலட்சணம் கூறும் பல பெரும் நூல்கள் உள்ளன; ஆனால் ஏழு பாடல்களுள் இதனை அடக்கிக் கூறியமை, **'அணுவைத் துளைத்து ஏழ் கடலைப் புகுத்தி'** என்பதற்கு ஒப்பாகும்.

தற்பர ஆண்டவர் பிரம்மமாகிய தன்னையே போற்றுதல் அகங்காரமெனப்படாதா என நினைத்தல் தவறு. பாரமார்த்திக நிலையடைந்த ஞானிமட்டுமே, மனமற்ற நிலையில், தற்பர உணர்வு பெறுகிறார். வியவகாரிக்கு மனம் உள்ளதால் அது அகங்காரமெனத் தோன்றும். ஆனால் வியவகாரியும் ஞான நிலை பெறுகையில், இத்தகைய நினைவு இராது.

இத்துடன் நூலறிமுகமும், இறைவணக்கப் பகுதியும் முடிவுறுகிறது. இத்தொடரின் முதல் இதழில், **'வேதாந்தப் படிக்கட்டுகள்'** எனக் கூறப்பட்டுள்ளவற்றில் முதலாவதான விரக்தி பற்றி இனிக் காண்போம்.

***- தொடரும்.***

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

“செய்யதெங்கி லேஇளநீர் சேர்ந்தகா ரணங்கள்போல்
ஐயன்வந்(து)இங்(கு) என்உளம் புகுந்துகோயில் கொண்டனன்
ஐயன்வந்(து)இங்(கு) என்உளம் புகுந்துகோயில் கொண்டபின்
வையகத்தில் மாந்தர்முன்னம் வாய்திறப்ப(து) இல்லையே”

பரம்பொருளை நேரில் கண்டபின் அங்கு பேச்சுக்கு வேலையில்லை என்பதே இதன் உட்பொருள். நெஞ்சமே ஆலயம். அதுதான் ஆண்டவனின் கருவறை. திருமூலர் கூற்றும் அதுவே.

“உள்ளம் பெருங்கோயில் ஊன்உடம்(பு) ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்”

என்ற பாடலில் புலன்களை விளக்காக உருவகிப்பார். சிவவாக்கியரும் ஒத்த கருத்தினரே.

கற்சிலைகளுக்கும், செப்புச்சிலைகளுக்கும் ஆடம்பரமான வழிபாடுகள் நடத்துவது தேவையற்றது என்பது சித்தர்கள் கருத்து. செங்கல்லையும் மணலையும் கொண்டு பெரும்பெருங் கோயில்களைக் கட்டி வீணாக்குவதை அறவே வெறுக்கின்றனர். நான் யார்? என்ற தேடல் எழுந்தால் ஞானியாகலாம் என்பது பகவான் இரமணரின் எண்ணமாகும். அதனால்தான்

“கோயிலாவ(து) ஏதடா குளங்கள்ஆவ(து) ஏதடா?
கோயிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே!
கோயிலும் மனத்துளே குளங்களும் மனத்துளே
ஆனதும் அழி(வு)அதுவும் இல்லை இல்லை இல்லையே”

என்று பேசுகிறார் சிவவாக்கியர்.

பொதுவாகச் சித்தர்கள் சாதி வேற்றுமை பாராட்டுவதை வெறுப்பவர்கள். இந்த மேனி ஐம்பூதக் கலவைகளால் ஆனது. நம் உடலிலே முக்கால் பகுதி நீர் உள்ளது. மூலக்கனலும் உள்ளது. காற்றும் உள்ளது. தலையுச்சி ஆகாயம் எனப்படுகிறது. பாதம் பூமி என்று

சொல்லப்படுகிறது. இந்த ஐம்பூதங்களும் பேருருக் கொண்டால் உலகில் எதுவும் மிஞ்சாது. அவ்வாறு ஐந்தும் ஒன்றாக எழுங்காலம் ஊழிக்காலம். இறுதி வருங்காலம் இவ்வுடல் எரியாலோ மண்ணாலோ அழிக்கப்படும். சாதி பார்த்தா உடலைத் தீயும் நீரும் அழிக்கின்றது. எந்தச் சாதியில் பிறந்த பெண்களாயினும் அவர்கள்பால் அனுபவிக்கும் இன்பமும் வேறாக இருக்குமோ? எச்சாதிப் பெண் நகைகள் அணிந்தாலும் அவைகளிடம் வேறுபாடு உண்டோ? என்று சாதிப்புரட்சியை அன்றே உண்டாக்கித் தீண்டாமையை வெறுத்தவர்கள் சித்தர்கள்.

"சாதிஆவ(து) ஏதடா சலம்திரண்ட நீர்எலாம்
பூதவாசல் ஒன்(று)அலோ? பூதம் ஐந்தும் ஒன்(று)அலோ?
காதில்வாளி காரைகம்பி பாடலம்பொன் ஒன்(று)அலோ?
சாதிபேதம் ஓதுகின்ற தன்மைஎன்ன தன்மையோ?"

"கறந்தபால் முலைப்புகா, கடைந்தவெண்ணெய் மோர்புகா
உடைந்துபோன சங்கின்ஓசை உயிர்களும் உடற்புகா
விரிந்தபூ உதிர்ந்தகாயும் மீண்டும்போய் மரம்புகா
இறந்தவர் பிறப்ப(து)இல்லை இல்லைஇல்லையே"

சிவவாக்கியரின் சீரிய வாக்காகும் இது.

உலகிடைப் பிறக்கும் உயிர்களின் பிறப்பு நிலையை உணர்த்தும் சிவவாக்கியர் ஆண்களின் சுக்கில நீரும் பெண்களின் உதிரமும் சேர்கையில் பிறப்பின் தோற்றம் பற்றி வெளிப்படையாகவே பேசுகிறார். நாட்டுப்புற மக்களிடையே திட்டுவதற்கென்றே கொச்சையாகப் பேசும் பேச்சு வழக்குச் சொற்களையே கையாள்கிறார். அனைத்துச் சித்தர்களிடமும் இத்தகைய அமைப்பினைக் காணலாம். மகத்துவமான மனிதப் பிறவிகள் அசுத்தத்தில் இருந்துதான் தோன்றுகின்றன என்பதைப் பட்டினத்தார் போன்றவர்களும் பாடியுள்ளனர். எடுத்துக்காட்டாக ஒரு பாடல் மட்டும் சான்றாகக் காட்டப் பெறுகின்றது. விளக்கம் நம்மால் உணரத் தக்கதே.

"சொற்குருக்கள் ஆனதும் சோதிமேனி ஆனதும்
மெய்க்குருக்கள் ஆனதும் வேணபூசை செய்வதும்
சற்குருக்கள் ஆனதும் சாத்திரங்கள் சொன்னதும்
செய்க்குருக்கள் ஆனதும் திரண்(டு)உருண்ட தூமையே"

இப்படி ஆபாசக்கலவையால் தோன்றிய உடம்பு வாழ்கின்றபோதே நன்னெறியை நாடுதல் அவசியம் என்று வலியுறுத்துகின்றனர் சித்தர்கள். வீட்டுலக வாழ்வை விரும்பியவர்களாக இருந்தனர். அநேகமாக அனைத்துச் சித்தர்களிடமும் இத்தகைய தாக்கம் இருக்கின்றது. செல்வங்களையோ, அல்லது வேறு விதமான இச்சைகளையோ விரும்பாது எப்பொழுதும் அவனைச் சேவித்து உலக மாந்தர்களுக்கு இயன்றவரை உதவுதலையும் வீட்டுலக வாழ்வை விரும்பியுமே வேண்டிச் சிவனைச் சேவித்தனர். பெரியபுராணம் பாடிய சேக்கிழாரும்,

"கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறகினர்"

என்று குறிப்பிட்டார்.

சித்தர்களின் வழிபாட்டு முறை நம்மிலிருந்தும் வேறுபட்டது. சிலை வழிபாடு, பல தெய்வ வழிபாடு என்றின்றிச் சிவவழிபாடு ஒன்றே சிந்தையிற் கொண்டவராய் இருந்தனர். வேறு கோயில்களை நோக்கிக் கையெடுப்பதில்லை.

"அண்டர்கோன் இருப்பிடம் அறிந்(து)உணர்ந்த ஞானிகள்
பண்(டு)அறிந்த பான்மைதன்னை யார்அறிய வல்லரே?
விண்டவேதப் பொருளைஅன்றி வேறுகூற வகைஇலாக்
கண்டகோவில் தெய்வம்என்று கைஎடுப்ப(து)
இல்லையே"

என்பது சிவவாக்கியர் பாடல்.

வழிபாடு என்று நீங்கள் வரையறுப்பது எதனை? ஆதி வழிபாடா? அனாதியாகத் தோன்றிய வழிபாடா? வேதங்களை

நீற்றைப் பூசிக்கொண்டு பலவாறு பிதற்றினாலும் அவர்கள் உள்ளத்தில் இறைவன் இருக்க மாட்டான். புறம்பே செய்யும் ஆரவாரமான வழிபாடுகளை ஏற்று அவன் நம்முடைய உள்ளத்தில் இருக்க மாட்டான். அருட்பெருஞ்சோதியாகிய இறைவனை நாம் இம்முறைகளால் அடைய இயலாது.

**"பூசைபூசை என்றுநீர் பூசைசெய்யும் பேதைகாள்**
**பூசைஉள்ள தன்னிலே பூசைகொண்ட(து) எவ்இடம்?**
**ஆதிபூசை கொண்டதோ? அனாதி பூசை கொண்டதோ?**
**ஏதுபூசை கொண்டதோ? இன்ன(து)என்(று) இயம்புமே"**

என்று கேட்டவர் சிவவாக்கியர்.

இன்றைக்கு உலகிலே நிகழும் வழிபாட்டு முறைகளைப் பற்றிச் சித்தர் ஒருவர் பாடிய தங்கப்பா என்ற தலைப்பிலான பாடல்களை அப்படியே கீழே தந்துள்ளேன். ஆடு, கோழி, பன்றி முதலியனவற்றைப் பலியிடுதலையும், தீ மிதிப்பதையும், தாரை, தப்பட்டைகள் முழக்குதலையும், உடுக்கையடிப்பதையும் ஏனைய பிற ஆரவாரங்களையும் வெறுத்துப் பாடிய சித்தர்களின் பாடல்களைக் கேட்டால் இன்றைய உலகம் அவரை நாத்திகர் என்று ஏளனம் பேசும். இந்தப் புரட்சியைத் தொடங்கி வைத்தவர் சிவவாக்கியரே. பின்னாளில் தோன்றி தடங்கண் சித்தர் இன்னும் புரட்சிகரமான முறையில் பாடிய தங்கப்பா என்ற பகுதியில் கீழே காணலாம்.

**அதிர்வெடி முழக்கி முரசுகள் முழக்கி**
**அலறிடும் உடுக்கைகள் துடிப்ப**
**விதிர்விதிர் குரலால் வெற்(று)உரை அலப்பி**
**வீணில்ஓர் கல்லினைச் சுமந்தே**
**குதிகுதி என்றே தெ(ரு)எலாம் குதிப்பார்**
**குனிந்துவீழ்ந்(து) உருகுவர் மாக்கள்**
**இதுகொலோ சமயம்? இதுகொலோ சமயம்?**
**எண்ணவும் வெள்கும்என் நெஞ்சே.**

*(தொடரும்...)*

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### III/09/12/II : உற்பத்திப் பிரகரண இதோபதேசம்

**தத்துவப் பகுதி II**

**4. மன நீக்கத்திற்கான செயல் முறை:**

இதற்கான படிக்கட்டுகளாக, 1) மனக் கட்டுப்பாடு (ஸம்யம்), 2) மன ஒரு முகப்பாடு, 3) மன இயைபு (இலயம்), 4) தூயமனம் (சித்தசுத்தி) ஆகியன் கூறப்படுகின்றன. தூயமனதை வாளாக்கி, தூய்மையற்ற எண்ணங்களை வெட்டி நீக்கிவிட்டால், 5) சாந்தம் (சாத்வீகம்) பெறலாம். சாத்வீகப் பயிற்சியால், 6) குழந்தை நிலை (மோனம்) கிட்டும். பின்னர், மேற்கூறியவைகளேதுமற்ற, 7) மனமின்மை (சாட்சி) நிலை பெறப்படும். இவ்வாறு கூறப்பட்டவற்றின் செயல் முறையாக, கீட்கண்ட வழிகள் சொல்லப்படுகின்றன:

1) 'உடல் நான்' எனும் அபிமான நீக்கம். இதனைத் திரும்பத்திரும்ப நினைப்பதால் உடற்பற்று, உடலுறுப்புக்களாலாகும் செயற்பற்று, இன வேறுபாடு (வர்ணம்) வாழக்கை நிலை (ஆசிரமம்) ஆகியன நீங்கும்.

2) தன் முனைப்பு (அகங்காரம்) காரணமாகப் பற்பல இரட்டைகள் (இன்ப - துன்பம், விருப்பு - வெறுப்பு போன்ற பல) உண்டாகின்றன. இதனை நினைத்து எப்போதும் இரட்டைகளற்ற நடுநிலை பேண வேண்டும்.

3) எண்ண அலைவு காரணமாகவே அனுபவிக்கும் ஆசை மற்றும் வேறுபாடு காணும் குணம் திடப்படுவதால், அவை தோன்றும் போதே நீக்க வேண்டும் இது,

"வருகற்பனை நாசத்தாலே மனம்போயிறக்கும்
மனமிறந்தால்......."

எனப்படுகிறது.

4) எண்ணம் தோன்றும் போதே நீக்கப்பட்டாலும், அவ்வெற்றிடத்தை நிரப்ப மற்றொரு எண்ணம் தோன்றுவது

இயல்பே. இதற்கு, மடைமாற்றம் செய்ய வேண்டும். இதனை,

**"மெத்துகின்ற வாதனையை விட்டான் மேலா நலமுளதாம்**
**சத்தின் அசத்தின் இடைநின்று....."**

எனப்படுகிறது. வேறெண்ணம் தோன்றாது மாற்ற, தியானம் உதவும். (சகுணப் பிரம்ம, நிர்குணப் பிரம்ம, தியானம் முறைகள் தனியே கூறப்படும்).

5) அடிப்படைத் தேவைக்கு மட்டுமான (இயம, நியம) செயல்களைச் செய்து விட்டு, மேலும் பலவாறான செயல்களைத் தவிர்க்க வேண்டும். இதனால் மன ஓட்டம்/அலைவு குறையும்.

6) சாத்திரப் படிப்பால் பெறும் அறிவு (பரோட்ச ஞானம்) மூலமாக மனத் தூய்மை (சித்த சுத்தி) பெறலாம். கானல் நீரின் உண்மையை நாம் அறிந்த பின்னும் அது தோன்றிக் கொண்டே இருக்கும். கானல் நீரில் நீரற்றுப் போவது போல, பின்னர், உலகியலும் நீங்கிவிடும். இது மாயை நீக்கமாகும். இதனை,

**"மடமையும் துயரும் அவயவ வடிவும் உடையவ**
**நானென்றே**
**படர்தரும் அவற்றிற்கு ஏற்ற பன்னடையால் பாசமும்**
**பந்தமும் உளதாம்**
**சடமுறும் இவற்றில் ஏதும் ஒன்றல்லேன் தசைநரம்பு என்பு**
**நீரல்லேன்**
**உடலின் மேலான பரமநானென்னும் உறுதியோர் மாயை**
**செற்றுணர்ந்தோர்,"**

(படர் : பரவிய, பன்னடை = பாவனை, செற்று = அழித்து) எனக் கூறியுள்ளார்.

7) மனமானது ஒரு எண்ணம் விட்டு மற்றொன்றிற்குத் தாவும் முன்னர் (இரண்டிற்கும் நடுவே) மிகச்சிறிய இடைவெளியில், நினைவேதும் இன்றி இருக்கும். இது,

**"ஒரு பொருளின் நினைவை ஒழித்து மேலப்பால்**
**ஒருபொருள் நினைவுறில் அந்த**
**இருபொருள் நடுவு நினைவற இருக்கும்இது**
**சொரூபத்தியல்பு இதுதான்**

மருவுகற்பனைமாண்டு அசைவில் கற்போலாய் வரு
நனாச்சுழுத்திதீர்வடிவாம்,"

எனப்படுகிறது. இந்த இடைவெளியை நீட்டிக்க முயலவேண்டும். இந்த இடைவெளியே சித்தமும் திரிபுடியுமற்ற சாந்த நிலை (நிர்விகற்பம்) எனக் கூறுகிறார். எப்போதுமே இந்நிலையுறுபவன், நனவுச் சுழுத்தி எனும் சீவன் முத்தனாவான்.

8) இச்செயல் முறைகளை, தனக்குத்தானே உதவியாக்க வேண்டுமென,

"மறமுற்று உளத்தை உளத்தாலே மாய்த்துப் பிறப்பில்
வருந்தாமல்
துறவுற்று உனைநீ உய்விப்பாய் உயிர்க்குப் பிறரால்
உய்வுண்டோ"

எனவும் வலியுறுத்துகிறார்.

5. **மன நீக்கத்தால் கிட்டும் நற்பயன்:** மன நீக்கத்தின் பின்னர், உலகில் வாழும் ஒருவர் எத்தகைய நிலையுறுவார் என்பது பற்றிக் கூறப்பட்டுள்ளவைகளாவன:

1) மனமானது கற்பனையே என உறுதியானதால், மனம் மூலமாகக் காணும் 'திரிபுடி' இல்லையென்றாகிறது. திரிபுடி இல்லையானால், பிறப்பு, இறப்பு மற்றும் வாழ்க்கை மாறுபாடுகள் ஆகியன உண்டாவதோ ஒழிவதோ இல்லை. இத்தகையவன் உலகியலில் மூழ்க மாட்டான். உள்ளது அறிவுமய சத் வடிவம் மட்டுமே என உணர்வதால், அவன் நனவில் சுழுத்தி (துரிய) நிலையடைவான்.

2) உலகியலுக்கு ஆட்பட்ட நமக்கெல்லாம், உடலுறுப்புக்கள் வழியே இன்ப-துன்ப அனுபவம் கிட்டுகிறது. ஆனால் மனமற்ற போது, உடலுறுப்புக்கள் உந்தப்படாத நிலையில், கிடைப்பது ஆனந்தமாகும். உடல், மன அனுபவமேது மற்ற இது ஓர் உணர்வு நிலையாகும். இதில் அனுபவிப்பு என்பது இல்லை. மனமற்ற ஆனந்தத்தில் எங்கும் அமைதியே காணப்படும்.

3) உலகியலுள் மூழ்காதவர், மாயையை வென்றவர் எனப்படுகிறார் என முன்னர் கூறப்பட்டது. மாயையை வென்று,

அதன் பின்னும் வாழ்பவர், சீவன் முத்தன் எனப்படுவார். இவர், "........துயில்விட்டு எழுந்தார்போல அடுத்தன செய்குவர், செய்யாராகி வாழ்வார்,"

என இருப்பவராவார். அவரது செய்கைகள், அடுத்து இருப்போரின் எதிர்பார்ப்புக்களுக்கு முரணாகக்கூட இருக்கலாம். உலகியலைக் கடந்த ஒருவரை, அதிலே மூழ்கியுள்ளவன் எடைபோட இயலுமா?

6. **ஆன்ம தத்துவம் உணர்தல்:**

**"கேவலமாகிக் கேவல ஒளியாய்க் கேடறு சுத்தமாய் விரிவாய்**
**ஓவலில்அறிவு மாத்திரமாகி உறுதுயர் ஒன்றுமற்று ஆறி**
**மேவருமிரதம் அனைத்தினுக்கொத்து விகாரமற்றுள பொருளிடத்தே**
**தாவருந் தனது நினைவையே விரும்பித் தன்வயத் தெழுந்தது ஓர்அறிவு."**

(ஓவல் இல் = ஒழிவு அற்ற. ஆறி = சாந்தமாகி, மேவருமிரதம் = மேலான பாவனைகள்) இப்பாடலில், சைதன்ய ஒளிர்வு எத்தகையது எனப்பட்டுள்ளது. மேலும், விருப்பமேதுமற்ற அது, 'தனது நினைவைத் தொடங்கிற்று. அந்நினைவால், ஓர் அறிவு தோன்றியது', எனவும் கூறுகிறார். அந்த அறிவால்,

**"செப்பிய அறிவுமுடிவில் சங்கற்பம் செய்து அதில்சென்றிடும் இதுதான்**
**இப்பிரமத்தின் மனதாம் இதனுக்கு எண்ணில் சத்திகள் உளவாகும்**
**கப்பிலாது எங்கும் நிரந்தரம் செய்யும் கடவுளாம் இம் மனந்தனிலே**
**அப்பிலே தோன்றும் திரைகள்போல் பேதமாகிய வல்லபம் தோன்றும்."**

(எண்ணில் = அளவற்ற, கப்பிலாத = பிளவற்ற, அப்பு = நீர், திரை = அலை)

இவ்வாறு பிரம்மத்தில் தோன்றிய அறிவு, சங்கற்பம், ஆற்றல்கள்,

மாயை என்பனவே, நாம், நம்மனம், மற்றும் உலகியல் ஆகியவற்றிற்குக் காரணமாகிறது. இவற்றில், மாயையைப் பொய்யென உறுதி செய்யப்பட்டுள்ளதால், மாயையால் தோன்றியவைகளும் பொய்யே எனப்படுகிறது. இதனை,

**"ஓரிடம்விட்டு ஓரிடத்தே உள்ளமுறில் அவற்றின்நடுவு உண்மையாகிப்**
**பேரிலதாய் உணர்விலதாய்ச் சடமிலதாய் அதுநீயாய்ப் பிரியேல்**

என்றும்

**கூரியபுந்தியினாலே ஊகித்துக் குடும்பி என்னும் குறிப்பை மாற்றித்**
**தூரியதாம்படி மனத்தின் துவக்கு அறுத்தே இருந்தபடி துணிந்து நிற்பாய்."**

(தூரியதாம்படி = தூரப்போகுமாறு, துவக்கு = பற்று)

எனக் கூறுகிறார். மேலும், நம் மோகத்திரை (ஆவரண மறைப்பு) நீங்கினால், உண்மை அறிவு ஒளிருமெனவும், அதுவே முடிவற்ற, ஒன்று மட்டுமான, வடிவமற்ற, பிறப்பு - இறப்பற்ற பிரம்மமும் ஆகும் எனும் உறுதியாக,

**"சோகமுறு சங்கற்ப நாசத்தால் மனம்மாளில் தொன்றுதொட்ட**
**மோகமெனும் மூடுபனி விட்டகலும் சரற்காலம் முதிரவந்தால்**
**மாகம்விளங்குவதென்ன நல்லறிவுமாத்திரமாய் மாயாதாகி**
**ஏகமாய் வடிவின்றிப் பிறப்புஇறப்பு இலாப் பிரமம் இலங்கும் நொய்தாய்"**

(மாளில் = நீங்கினால், சரற்கால....மாகம் = தூயவானம், மாயாதாய் = முடிவற்றதான, இலங்கும் = விளங்கும், நொய்தாய் = நுட்பமாய்) எனும் பாடலால், எந்த நிலையில் 'நீ அதுவாக இருக்கிறாய்', என்பதைக் குறிப்பிட்டு முடிக்கிறார்.

இராகவர் கேட்ட இரண்டு கேள்விகளுக்கு இவ்வாறு விளக்கம் தரப்பட்டுள்ளது.

(பிற்குறிப்பு: மனம் பற்றிய விரிவான மனதத்துவ விசாரணையாக இப்பகுதி அமைந்துள்ளது. விசாரணையைச் சரியான முறையில் தொடர்தல் எவ்வாறு எனும் எடுத்துக்காட்டாகவும் இதனைக் கூறலாம்.

பாடல் 8ல், நம் முற்பிறவிப் பதிவுகள் (வாசனை) மற்றும் எண்ணங்கள் (சங்கற்பம்) பற்றிக் கூறியுள்ளமையால், பிறப்பு என்பது உண்மையே. ஆனால் இதற்கு முரணாக, பிறப்பு - இறப்பு மற்றும் உலகியல் ஆகியன, 'உண்டாவதோ ஒழிவதோ இல்லை', என பாடல் 21ல் கூறப்படுகிறது. இதேபோல, செயல்கள் வேண்டும் எனவும், செயல்களற்ற நிலை உயர்வுடையது எனவும் எதிர்மறையான கருத்துக்களை அளவை நூலே தெரிவிக்கிறது.

இவற்றை, ஒரே மனிதனுக்கான இருவேறு நிலைகளாகக் கொள்ள வேண்டும். அவை முறையே, வியவகாரிக நிலை மற்றும் பாரமார்த்திக நிலை என விசாரணை செய்தறிய வேண்டும். ஆதலால், மனம் என்பது மாயை, இல்லாதது, சடம், சாட்டியம் என்பதை வியவகார நிலையாகவும்; மனம் என்பது சைதன்யம், அறிவு சேதனம், சத்து, பிரம்ம சொரூபம் என்பதை (பாடல் 13) பாரமார்த்திக / ஞான நிலையாகவும் ஏற்க வேண்டும்.

இத்துடன் உற்பத்திப் பிரகரணம் முடிவுறுகிறது. மனம் பற்றிய தத்துவ விசாரணை இனியும் வரும். இங்கு தொடங்கப்பட்டுள்ள இதோபதேச முறைமை, இனிவரும் ஒவ்வொரு பிரகரண முடிவினும் தொடரும்.

*(...தொடரும்)*

## மடாலய நிகழ்வுகள்

15.6.2015 அன்று 7ஆவது பட்டம் ஸ்ரீமத் மகாதேவ ஞான தேசிகர், 25.6.2015 அன்று பள்ளத்தூர் பெரிச்சியப்ப அய்யா , 28.6.2015 அன்று ஸ்ரீ சபாபதி சுவாமிகள், 29.6.2015 அன்று 9ஆவது பட்டம் ஸ்ரீமத் ராமநாத ஞான தேசிகர் , 10.7.2015 அன்று திருக்களர் கிருஷ்ணசாமி, 13.7.2015 அன்று ஸ்ரீலஸ்ரீ சின்னத்துறவு சுவாமிகள் மற்றும் 13.7.2015 அன்று 11ஆவது பட்டம் காசி விஸ்வநாதன சுவாமிகள் ஆகியோரின் குருபூஜைகள் மிகச் சிறப்பாக நடைபெற்றன. 27.6.2015 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் பேராசிரியர் கதி. கணேசன் சண்டீஸ்வர நாயனார் என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினார்.

# கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

## (உபநிடதப் பொருளுரைத்த படலம்)

எப்பொருளால் நீயிர்உதித் திடஅதிகா ரம்பெற்றீர்
எப்பொருள்ஆ ணையில்தழலோன் இரவிதகிப் பான்சரிப்பான்
எனப்பொருள்ஏ வலிற்கந்த வாகனன்இனி(து) இயங்கிடுவான்
அப்பொருளே பரம்பொருள்மற்(று) அதைஉணர்வான் கருதினன்யான் 39

எவனால்இந் திரன்மழைபெய் திடுதல்முதல் புரிந்திடுவன்
எவன்ஆணை வழிஇயமன் எவ்இடத்தும் சங்கரிப்பன்
எவன்ஆதி காரணன்என்(று) உபநிடதம் எடுத்(து)உரைக்கும்
அவன்ஆன பரசிவைன அறிதருவான் கருதினன்யான் 40

என்றுமதுப் பிரியமுனி இயம்பியிடலும் அதுகேட்டு
வென்றுமலர் மேல்உறையும் வேதியனும் மாதவனும்
குன்றுவளை சிலையாகக் கொண்டதிறல் உருத்திரனும்
நன்(று)உனது கருத்(து)இதுவேல் நாம்அல்லோம் என்(று)அகன்றார் 41

அந்தமுனி வரன்பின்னும் அள(வு)இல்மான் மியம்பொதிந்து
சந்தம்மிகும் இத்தவத்தே தவாநியமத் துடன்அமர்ந்து
பந்தவினை முழு(து)ஒழித்துத் தீவிரத்தில் பயன்கொடுக்கும்
நந்தல்இல்உக் கிரமான நலம்மலியும் தவம்புரிந்தான் 42

கற்றமதுப் பிரியமுனி கடியதவம் புரிபொழுதின்
உற்றதவத் தழல்எழுந்தே உலகம்எலாம் வியாபிக்க
முற்றவும்வாழ் சராசரங்கள் முறுகுதா பத்தொடக்குப்
பற்றமெலிந்(து) அறவிளைத்து முகம்கருகிப் பதைத்தனவால் 43

வருத்தம்மிகும் அதுநோக்கி வானவர்கோன் அமரரொடும்
பொருத்தம்மிகும் மலர்மேலான் புண்டரிகப் பதம்தொழுது
திருத்தம்மிகும் உண(வு)உயிர்ப்புத் தீர்ந்துமுனி செய்தவத்தால்
இருத்தம்மிகு தாபம்எழுந்(து) எவ்இடனும் தகிக்கும்என 44

மன்னவன்வாய் மொழிகேட்டு மலர்மேலான் விரைந்(து)எழுந்தே
அன்னம்மிசை இவர்ந்துசமி வனத்(து)அடைந்(து)அங்(கு) அமர்கின்ற
முன்னரிய பேரொளியாம் சிவலிங்கம் முன்பணிந்து
தன்அனையாய் மதுப்பிரியன் தவம்புரிதல் உணர்ந்தாயே 45

அவனுடைய கருத்துமுடித்(து) அளிப்பவன்மற்(று) உனைஅன்றி
எவன்உளன்எந் தாய்வாளா இருப்ப(து)எவன் எனவேண்டச்
சிவபெருமான் நம்பால்நீ தெளிபிரம ஞானத்தைத்
தவல்அறமற்(று) அவற்(கு)உரைத்தி சதுமுகத்தோய் எனவிடுத்தான்
46

விடுத்தசிவ பெருமானை மீட்டும்தான் பணிந்(து)எழுந்தே
அடுத்தமதுப் பிரியமுனி எதிரேவந்(து) அயல்நின்றான்
தொடுத்தவினைக் கட்(டு)அறுப்பான் சூழ்ந்துதவம் புரிகின்றான்
மடுத்தமகிழ்ச் சியன்ஆகி எழுந்துமலர் அடிபணிந்தான் 47

தவமுனிவன் தனைநோக்கிச் சார்தருநம் பிரியம்உளாய்
அவமகன்றநின் பெருந்தவத்தால் அடையும்அகி லமும்தாபம்
உவமைஇல்இத் தவத்தைஇனி ஒழிதிபுரிந் ததுபோதும்
சிவபெருமான் அருள்வழியே சேர்ந்தனம்யாம் என்(று)உணர்தி 48

மேல்ஆய உபநிடதம் விரித்(து)உரைக்கும் பிரமத்தை
மால்ஆய உணர்ச்சிஅறுத்(து) உணர்தரநீ வாஞ்சித்தாய்
பாவாய நின்கருத்து நிறைவேறும்படிஇன்பச்
சாலாய் உபாயத்தைச் சாற்றுதும்அன் பொடுகேட்டி 49

விரும்புபரப் பிரமம்என விளங்கும்ஒரு பரசிவத்தை
அரும்பும்உவ கையின் அறிதற்(கு) ஆகியபேர் உபாயந்தான்
கரும்பும்அமு தமும்பாகும் கற்கண்டும் கைப்(பு)என்னத்
தரும்புதிய சுவைஅமைந்து சால்பிரம வித்தையே 50

அரும்பிரம வித்தைஅள(வு) அறிந்(து)உணும்முத் தமப்புசிப்பு
விரும்பியநிட் காமவினை மேதகைய தவம்தானம்
இரும்புவிகொள் மக(ம்)ஆதி இயற்றுசித்த சுத்தியர்க்கே
வரும்பிறருக்(கு) யா(து)ஆகும் மதுப்பிரிய மாமுனியே 51

உற்றபரி பூரணமாய் உண்மைஅறி(வு) இன்பமாய்ப்
பெற்றபர மாத்துவிதப் பிரத்தியக பின்னமாய்
முற்றஒளிர் பிரமத்தை உணர்தரமுக் கியமாகச்
சொற்றஉபா யம்பிரம வித்தைஅலால் இலைதுணிபே 52

என்(று)உரைத்த மலரோனை மதுப்பிரிய முனிஇறைஞ்சி
நன்(று)உரைத்தாய் பிரமவித்தை நாயினேன் உணர்தருபாக்(கு)
இன்(று)உரைத் தலேவேண்டும் பலம் உள(து)என்(று) அவ மாகின்
அன்று உரைத்துக் கழிந்ததுபேலல் கழியாது என்று அடிபணிந்தான் 53

மலரவனே குரவனாய் மதுப்பிரியற்(கு) அஞ்செழுத்தும்
இலகமுனம் உபதேசித்(து) எதிர்முகமாய் உறஇருத்தி
உல(கு)உபகா ரமதாக ஒளிர்பிரம வித்தைதனை
அல(கு)இல்பெருங் கருணையினால் அறைதரல்உற் றான்மன்னோ 54

**வேறு**

யா(து)ஒரு வத்து வானது சிருட்டி
ஆரம்ப சமயத்தில் தன(து)ஆம்
ஏதம்இல் மாயா சத்தியால் முன்னர்
ஈச்சுரன் ஆய்வெளி ஆதி
பூதபௌ தீகப் பிரபஞ்சம் முழுதும்
பொருந்(து)உறச் சிருட்டித்துப் பின்னர்
ஓதரும் சீவ ருபம்ஆய் அந்தப்
பௌதிக உடல்தொறும் கலந்து 55

ஆன்(று)அகத்(து) உருபோத்(து) உருமுதல் உருவம்
ஆனது போலத் தோன்றிடுமோ
சான்றமற்(று) அதுவே தகும்பரப் பிரமம்
சதாபர சிவம்எனத் தெளிதி
மான்றஜம் பொறியின் வழிச்செல(வு) ஒழித்தே
மனம்ஒரு வழிச்செல நிறுவிக்
கான்றிடு பதத்தில் புவனங்கள் அனைத்தும்
கண்டமா முனிவர இன்னும் 56

## வேறு

மொழிபஞ்ச கோசஇலட் சணம்அதாய்த் தேகம்
மூன்றனுக்கும் வேறாய்ஓர் மூன்றவத்தைச் சான்றாய்த்
தழிநின்ற சசாதிஅவி சாதியசு வகத
பேதரகி தமதாய்நல் தேசமொடு காலம்
இழி(பு)ஒன்றா வத்துபரிச் சேதசூ னியமாய்
இருக்கின்ற சத்தியஞா னானந்தா கண்ட
பழிஒன்றா வத்துவே பரப்பிரம்மம் அதுவே
பரமசிவ சொரூபம்என அறிதியால் இன்னும் 57

பெருகுசச்சி தாநந்த சொரூபமே ஆகிப்
பிரத்தியக்கான் மாவான யாதொருவத்(து) ஆன(து)
ஒருவரும்தன் சந்நிதிமாத் திரத்தால்கண் ஆதி
இந்தியத்தை உருஆதி விடயத்(து)எப் போதும்
இருநியமம் ஆய்விவிக்கின்ற அதியா(து)ஓர் வத்தால்
இந்நானா விதம்ஆன ரூபசகம் வெளிபோல்
மருவவியா பிக்கப்பட்(டு) இருப்பதோ அந்த
வத்துவே பரப்பிரமம் பரசிவம் என்(று) அறிதி 58

பரமசிவ சொரூபம்யா வருக்கும்ஆன் மாவாய்ப்
பரவுபரி பூரணமாய் இருக்கும்எனில் அந்தப்
பரமசிவ சொரூபத்தை யாவரும்ஏன் அறிய
இல்லையென வினவுதியேல் பகர்ந்திடுதும் கேள்நீ
பரமசிவ சொரூபத்தையே உணர்தல் வேண்டிப்
பன்னாளும் காமாதி களைந்துதவம் புரிந்து
பரமசிவ சொரூபத்தை உணர்உபா யம்அதாய்ப்
பயில்பிரம வித்தைவிருப் புற்றமா முனியே 59

அறைசுயம்பு ஆனஅந்தப் பரமசிவம் சிருட்டி
ஆதிதனின் மனம்முதலா இந்திரியம் அனைத்தும்
நிறையவெளி முகமாகச் சிருட்டித்த படியால்
நீடியஅவ் இந்திரிய வசத்தரே ஆகி
உறையும்வெளி முகம்ஆனார் யாருள்ம்எவ் இடத்தும்
உற்றவியா பகம்ஆய பிரத்தியக்க பின்னம்
மறை(வு)இல்பர சிவத்தைஒரு வரும்அறிய வில்லை
மாண்புடைய தவத்(து)உயர்ந்து மகத்துவம்சால் முனியே 60

*(தொடரும்...)*

# ஐம்புலன் அடக்கமே மானுட நெறி

**( முனைவர்.டி.ஆர்.குருமூர்த்தி )**

"அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்"

எனத் திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். அடங்காமை தவிர்த்து அடக்கத்தைக் கற்றுக்கொண்டு வாழ வேண்டும். அத்தகு வாழ்க்கை நம்மை அமரருள் சேர்க்கும். சொர்க்கத்தில் இடம் பெற்றுத் தரும். வாழ்வில் அடங்காமை இருப்பின், வாழ்வும் இருளாகி, நரகத்திற்கு நம்மை இட்டுச் செல்லும்.

"காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை உயிர்க்கு"

அடக்கம் என்பது ஒருவன் தனது வாழ்வில் செல்வத்தைப் போலக் காத்து வர வேண்டியதொன்றாகும். அடக்கத்தைப் போன்ற செல்வம் ஒருவனுக்கு இவ்வுலகில் வேறெதுவும் இல்லை.

"அறிவது அறிந்து அடங்கி அஞ்சுவது அஞ்சி" - என நாலடியார் தெரிவிக்கின்றது. எத்துணை கலையும், ஞானமும் அறிந்திருந்தாலும் அடங்கியிருத்தல் வேண்டும் என்பது தெரிகின்றது.

'அடக்கம்' என்பது செல்வமாகச் சொல்லப்படுகின்றது. அடக்கம் என்பது மானுடப் பிறவியை சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்லும் பண்பாகப் போற்றப்படுகின்றது. அடக்கம் என்னும் பண்பினைப் பேணும் மனிதர்கள் சமுதாயத்தில் உய்வகை பெற்றுப் போற்றப் படுவார்கள் என்பது தெரிகின்றது.

ஐம்புலன்களின் செயல்பாடுகள் ஓர் மனிதனின் அடக்கம் என்னும் பண்பினைத் தீர்மானிப்பதாக நீதி நூல்களும், பக்தி நூல்களும் தெரிவிக்கின்றன. கண், காது, மூக்கு, வாய், மெய் ஆகிய ஐம்புலன்களின் செயல்பாடுகள் அடக்கம் என்னும் மாபெரும் மானுட நெறியினைத் தீர்மானிக்கின்றன. ஒருவனுடைய புலன்கள் அவனது வசப்படின், அனைத்துச் செல்வங்களும் அவனது வசப்படும். இல்லையேல், செல்வமும் அழியும். உடலும் அழியும்.

திருவாசகத்தில் மாணிக்கவாசகர்,

" **மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை**
**மலங்கப் புலன் ஐந்தும் வஞ்சனையைச் செய்ய**
**விலங்கு மனத்தால் விமலா உனக்குக்**
**கலந்த அன்பாகிக் கசிந்துஉள் உருகும்**", என்று கூறுவார்

உடலுக்கு ஒன்பது வாசல்கள். உடலின் அழுக்கினை ஒன்பது வாசல்களும் வெளியேற்றுகின்றன. உடல் என்பது இத்தகு ஒன்பது வாசல்களைக் கொண்ட வீடாகும் (குடிலாகும்.) ஐம்புலன்கள் நம்வசம் இல்லையென்றால், உடல் என்னும் வீடு பழுதாகிவிடும். ஒன்பது வாசல்களும் தன்பணியிலிருந்து சற்று விலக நேரிடும். ஐம்புலன்கள் வஞ்சனை செய்தால் மனித மனம் மானுடப் பண்பைத் தவிர்த்து விலங்கு மனத்தைப் பற்றிக் கொள்ளும், மற்ற உயிர்கள் மீது அன்பினைப் பொழியாது அறங்களை மறக்கும். ஐம்புலன்களை நாம் ஆள வேண்டும். புலன்கள் நம்மை ஆளக் கூடாது என மாணிக்கவாசகர் வலியுறுத்துகின்றார். ஐம்புலன்கள் நம்மை இழுத்துக் கொண்டால் நாம் இறையருள் பக்கம் செல்வது இயலாத ஒன்றாகிவிடும். மனத்திடை இடர் பெருகும். வாழ்வில் ஒளி விலகும். நமது அன்றாடப் பணிகளில் மகத்துவம் குறையும். நமக்கு நெருக்கமானவர்கள் குறைந்து விடுவார்கள். உறவுகள் குறையும். ஐம்புலன்கள் அடக்கமே இவ்வுலகில் நல்வாழ்வு வாழத் தேவைப்படும் உயரிய பண்பாகும்.

திருநாவுக்கரசர் தாம் இயற்றிய தேவாரப் பாடலில்

**"மெய்யுளே விளக்கேற்றி வேண்டளவு உயரத்தூண்டி**
**உய்வதோர் உபாயம்பற்றி உகக்கின்றேன் உகவா வண்ணம்**
**ஐவரை அகத்தே வைத்தீர் அவர்களே வலியர் சாலச்**
**செல்வதொன்று அறியமாட்டேன் திருப்புகலூரனீரே"**.

என்கிறார்.

என் உள்ளத்திலே ஞானவிளக்கினை ஏற்றி வேண்டிய அளவு சுடரினைத் தூண்டி வாழ்வில் வெற்றியடைவதற்கோர் வழியினைத் தேடுகின்றேன். அவ்வாறு வழியினைத் தேட விடாது ஐம்புலன்கள் என்னைத் தடுக்கின்றன. என்னை விட வலிமையான ஐம்புலன்கள் என் உடலில் வைத்தாய். என்ன செய்வதென்று தெரியவில்லை எனத் திருப்புகலூரில் உறையும் எம்பிரானிடம் சொல்வதாக இப்பாடல் அமைந்துள்ளது.

மனவலிமை ஐம்புலன் அடக்கத்திற்கு அடித்தளமாகும். மனவலிமை குறையக் குறைய புலன்களின் வலிமை கூடிவிடும். 'மனம் போன போக்கில் போவது' மனவலிமை குறைகிறது என எடுத்துக் கொள்ளலாம். ஐம்புலன் அடக்கம் இல்லையேல் மானுட வாழ்வு பயனற்றுப் போகும் எனத் திருநாவுக்கரசர் தெளிவுபடுத்துகின்றார்.

திருஞானசம்பந்தர் தமது தேவாரப் பாடலில்

**'கொடுக்க கிற்றிலேன் ஒண்பொருள் தன்னைக்**
**குற்றம் செற்றம் இவை முதலாக**
**விடுக்க கிற்றிலேன் வேட்கையும் சினமும்**
**வேண்டில் ஐம்புலன் என் வசமல்ல'**

எனப் பாடியுள்ளார். ஐம்புலன்கள் நம்வசம் இல்லையெனில், ஆசையும், கோபமும் நம்மைவிட்டு விலகாது. குற்றமும் பகையும் விலகாது. ஆசையும், கோபமும் பெருகிய மானுட வாழ்வு செழிப்பாக இருக்காது. ஐம்புலன்களை நாம் ஆளப் பழகிக் கொண்டால், வாழ்வில் ஆசையும், கோபமும், குற்றமும், பகையும் குறையும் எனத் திருஞானசம்பந்தர் வாழ்வு நெறியாகக் குறிப்பிடுகின்றார்.

திருஞானசம்பந்தர் தமது மற்றொரு பாடலில்

**"தாயும் நீயே தந்தை நீயே சங்கரனே அடியேன்**
**ஆயும் நின்பால் அன்புசெய்வான் ஆதரிக்கின்றது உள்ளம்**
**ஆயமாய காயம்தன்னுள் ஐவர்நின்று ஒன்றல் ஒட்டார்**
**மாயமே என்று அஞ்சுகின்றேன் வலிவலம் மேயவனே".**

என்று பாடுகிறார்.

தாயும் தந்தையுமாக இருக்கும் இறைவன் மீது அன்பு செய்யவும், ஆதரிக்கவும் அடியேனின் உள்ளம் தயாராக இருக்கின்றது. ஆனால் உடலில் குடிகொண்டுள்ள ஐம்புலன்கள் இறைவனை அடையத் தடையாக உள்ளன. அந்தத் தடை மாயம் எனச் சொல்லி, ஐம்புலன்கள் உன்னை அடையத் தடுத்து விடுமோ என்ற எனது அச்சத்தை விலக்கி அருள்வாய் வலிவலம் மேவிய எம்பிரானே என ஞானசம்பந்தர் குறிப்பிடுகின்றார். அன்றாட வாழ்வு வளம் பெற மட்டுமல்ல, இறையருள் பெறுவதற்கும் ஐம்புலன்களின் அடக்கம் நமக்கு அவசியமாகின்றது.

"ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து"

ஆமை ஐம்புலன்களை உள்ளிழுத்துக் கொள்வதால் ஆபத்திலிருந்து பிழைத்துக் கொள்கின்றது. மனிதர்கள் அப்படியில்லை. புலனடக்கம் இன்றிச் சிரமப்படுகிறார்க்ள. ஒரு பிறவியில் ஆமையை ஒத்த ஐம்புலனடக்கம் இருப்பின், அதன் பயன் ஏழு பிறப்பிலும் உண்டு எனத் திருவள்ளுவர் தெரிவித்துள்ளார். பழிவாங்கும் எண்ணம் புலனடக்கத்தைக் காற்றில் பறக்க விடும். மன்னிக்கும் உள்ளம் புலனடக்கத்திற்கு உரமாகி வலுச்சேர்க்கும்.

ஐம்புலனடக்கத்தின் அவசியத்தைத் திருமூலர் தமது திருமந்திரத்தில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

"பருஊசி ஐந்தும்ஓர் பையினுள் வாழும்
பருஊசி ஐந்தும் பறக்கும் விருகம்
பருஊசி ஐந்தும் பணித்தலைப்பட்டால்
பருஊசிப் பையும் பறக்கின்றவாறே".

புலன்கள் ஐந்தும் நம் உடலாகிய பையில் வாழும். ஐம்புலன்களும் ஐந்து பெரிய ஊசிகள். நிலையற்று இருக்கும் மிருகங்களைப் போன்றவை. பணிவு பெறாத ஐம்புலனெனும் ஊசிகள் மனதைக் குத்திக் காயப்படுத்தும். நம் மனதை மட்டுமல்ல, மற்றவர் மனதையும் கூடக் காயப்படுத்தும். மிருகக் குணத்தைக் கொடுத்துச் சிறுமை சேர்க்கும். ஐம்புலன்களும் பணித்தலைப்பட்டால், - அதாவது புலன்கள் நமது கட்டுப்பாட்டில் இருந்தால், நமக்குப் பணிந்திருந்தால், ஐந்து பெரிய ஊசிகளைக் கொண்ட உடலான பை விண்ணில் பறக்கும் வித்தையைக் கற்க முடியும். ஐம்புலன்களின் அடக்கம், வாழ்வை வளமாக்கும் மந்திரம் எனத் திருமூலர் தெரிவிக்கின்றார்.

ஐம்புலன்களின் அடக்கம் மானுட நெறியாகும். தனிமனித ஒழுக்கத்தை வளர்க்கும். வாழ்வினை மேம்படுத்தும். ஐம்புலனடக்கத்திற்கு இறையருளே மார்க்கம் எனத் திருமூலர் குறிப்பிடுகின்றார்.

●

"தானே புலன்ஐந்தும் தன்வச மாயிடும்
தானே புலன்ஐந்தும் தன்வசம் போயிடும்
தானே புலன்ஐந்தும் தன்னில் மடைமாறும்
தானே தனித்துஎம் பிரான்தனைச் சந்தித்தே".

நாம் எம்பிரானிடம் புலன் அடக்கம் வேண்டி வணங்கி வந்தால், ஐம்புலன்கள் நம் வசமாகும். ஐம்புலன்களும் தன் விருப்பப்படி இயக்குவது தடைபடும். ஐம்புலன்கள் நம்மை ஆட்டுவித்த நிலை மாறும். 'இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்' என மாணிக்கவாசகர் அருளியபடி, இறைவனது திருவடியினைப் பற்றி நிற்போர்க்கு ஐம்புலன்களும் தன்வசமாகும். வாழ்வும் செழிக்கும்.

ஔவையார் தாம் அருளிச் செய்த விநாயகர் அகவலில் ஐம்புலனடக்கம் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

"ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இனிதெனக் கருளிக்
கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்து
இருவினை தன்னை அறுத்து இருள் கடிந்து
தலம்ஒரு நான்கும் தந்தெனக்கருளி
மலம்ஒரு மூன்றின் மறுக்கம் அறுத்தே
ஒன்பது வாயில் ஒருமந்திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதும் காட்டி"

ஐம்புலன்களை அடக்கும் உபாயம் தந்தருளி, ஐம்புலக் கதவை அடைக்க அருள் தருவாய் என விநாயகப் பெருமானிடம் வேண்டுகின்றார். மும்மலம் (ஆணவம், மாயை, கன்மம்) அறுபட, ஐம்புலக்கதவு அடைபட வேண்டும்.

ஐம்புலன்கள் மனிதனது அன்றாட வாழ்விற்கு உதவும் முதன்மைக் கருவிகளாகும். ஐம்புலன்கள் பழுதுபட்டால் வாழ்வும் பழுதுபடும். ஐம்புலன்களில் எவ்விதக் குறையும் ஏற்படாது நாம் காக்க வேண்டும். ஐம்புலன்கள் எவ்விதக் குறையுமின்றி நம்மைக் காக்க இறைவன் அருள்புரிதல் வேண்டும். ஐம்புலன் அடக்கம் என்னும் மானுட நெறி இறையருளால் மானுடர்க்குக் கிட்டும்.

# குங்குலியக் கலய நாயனார்

## (முனைவர் சபா. அருணாசலம்)

அறுபத்து மூன்று நாயன்மார்களும் சிவவழிபாட்டில் ஒரு செயலை, வழிபாட்டு முறையை உறுதியாகப் பற்றி நின்று உயிரே போனாலும் அதைவிடாது செய்யும் உள்ளம் ஓங்கியவராய் வாழ்ந்து நமக்கு வழிகாட்டுகிறார்கள். ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட வாழ்ந்த சிவனடியார்கள் என இவர்களைச் சேக்கிழார் போற்றுவார். இவர்களுள் குங்குலிய தூபம் இட்டு வழிபடுவதைத் தன் வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்டவர் குங்குலியக் கலய நாயனார்.

குங்குலியம் என்பது ரப்பர்மரம் போன்ற ஒருவகை மரத்தில் வெளிப்படும் பால். அது பிசின் போலக் காய்ந்து கட்டி கட்டியாக வரும். சிவப்பு நிறமுடையதாக இருக்கும். அதைத் தீயில் (தணலில்) இட்டுப் புகைத்தால் நறுமணம் கமழும். சாம்பிராணி போடுவது போலப் புகைவரும். மாசுகளைப் போக்கிச் சுற்றுப்புறச் சூழலைத் தூய்மையாக்கும். திருக்கோவில் ஏராளமான மக்கள் கூடுமிடம். அங்கு குங்குலியம் இடுதல் நறுமணம் தந்து பக்தி உணர்வைத் தூண்டுவதோடு மக்களுக்கும் தூய்மையான காற்றை வழங்கும். திருக்கடவூர்த் திருக்கோவிலில் சிவபெருமான் கருவறை முன் குங்குலிய தூபம் இட்டு வழிபடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார் கலயனார்.

ஞானசம்பந்தப் பெருமானும் திருநாவுக்கரசர் பெருமானும் திருக்கடவூருக்கு வந்தார்கள். கலயநாயனார் அவர்களை வரவேற்றார். கலயனார் மனையில் அவர்கள் திரு அமுது உண்டார்கள். கலயனாரின் குங்குலிய தூபமிட்டுச் சிவனுக்குத் தொண்டு செய்யும் திருப்பணியைச் சேக்கிழார் பெருமானுக்கும் சுந்தரருக்கும் முன்பாகப் பதிவுசெய்து பாடியவர்கள் ஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் ஆவார்கள்.

**பெரும்புலர் காலைமூழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி**
**அரும்பொடு மலர்கள் தூவி ஆர்வத்தை அகத்தே வைத்து**
**விரும்பிநல் விளக்குத் தூபம் விதியினால் இடவல்லார்க்குக்**
**கரும்பினில் கட்டி போல்வார் கடவூர் வீரட்டனாரே**

எனத் திருக்கடவூர்த் தேவாரத்தில் அப்பர் பாடுகிறார்.

திருக்கடவூர் விதியையும் திதியையும் வென்ற தலமாகும். மார்க்கண்டர்க்காகச் சிவபெருமான் காலனைக் காய்ந்தார். மார்க்கண்டர் விதியை வென்றார். அபிராமி பட்டர்க்காக அன்னை அமாவாசையைப் பௌர்ணமி ஆக்கினார். அருளால் திதி மாறியது. அங்கு எழுந்தருளியுள்ள ஈசர் கலயனார். அமிர்த கடேசுவரர் என்பர். தேவர்கள் அமுதக் கலயத்தை இவ்வூரில் வைக்க அமிர்தமே சிவலிங்க வடிவாயிற்று என்பது புராண வரலாறு. இறைவன் கலயனாரின் திருநாமமே நாயனாரின் பெயர். சிவபெருமானிடம் பேரன்புடன் வழிபாடு செய்த கலயனார் நாள்தோறும் திருக்கோவிலில் குங்குலியம் கொண்டு தூபம் இடுவார்.

**துங்கநீள் மருப்பின் மேதி படிந்து பால்சொரிந்த வாவிச்**
**செங்கயல் பாய்ந்து வாசக்கமலமும் தீம்பால் நாறும்**
**மங்குல் தோய் மாடச்சாலை மருங்கு இறைஒதுங்கும் மஞ்சும்**
**அங்கு அவை பொழிந்த நீரும் ஆகுதிப் புகைப்பால் நாறும்**

எனத் திருக்கடவூரை வருணிக்கும் சேக்கிழார் ஒரு அரிய கருத்தைச் சொல்கிறார். எருமையின் அன்பு வெளிப்பாடு பால். அது குளத்து நீரில் கலந்தது. குளத்தில் மீன் மீது படிந்தபால் அது துள்ளித் தாமரை மலரில் விழத் தாமரை பால் மணம் பெற்றது. பால் நாயனாரின் அன்பு. கமலம் இறைவனின் திருவடி. அவரது திருவடி அன்பை ஏற்று அன்புமணம் வீசியது. வீடுகளில் வேள்வி செய்கின்றனர். அங்கு ஒதுங்கிய மேகத்தில் வேள்விப்புகை படிந்தது. அந்த மேகம் மேலே போய் மழை பொழிய மழைத்தண்ணீரில் வேள்விப்புகை வாசம் வீசியது. கலய நாயனாரின் அன்பை நுகர்ந்த ஈசன் அந்த அன்பு மணக்கச் செல்வமழை பொழிந்த வரலாற்றை இந்தக் காட்சி வருணனை காட்டுகிறது.

விதி வயத்தால் இறையருளால் கலயனார் வறுமையுற்றார். கால்நடைகள், அடிமைகள் என வீட்டில் இருந்த எல்லாவற்றையும் விற்றும் குங்குலியம் வாங்கி இட்டார். வீட்டில் உணவில்லை கடன் தருவாருமில்லை. இரண்டு நாள் குழந்தைகள் உண்ணவில்லை. ம்னைவியார் என் செய்வார்? பாவம். ஒரு முடிவெடுத்தார்.

**யாது ஒன்றும் இல்லை ஆகி இருபகல் உணவு மாறிப்**
**பேதுறு மைந்தரோடும் பெருகு சுற்றத்தை நோக்கிக்**

**காதல்செய் மனைவியார்தம் கணவனார் கலயனார்கைக்**
**கோதுஇல் மங்கலநூல் தாலிகொடுத்து நெல் கொள்ளும் என்றார்**
எனச் சேக்கிழார் பாடுகிறார். மஞ்சள் நூலை முடிந்துகொண்டு தங்கத்தாலியைக் கழற்றிக் கணவனார் கலயனார் கையில் கொடுத்து இதை விற்று நெல் வாங்கி வாருங்கள் எனக் கொடுத்தார். மிஞ்சியிருந்த ஒரே செல்வம் தங்கத்தாலி. அம்மையாருக்குக் குழந்தைகள் உண்ணவில்லையே என்ற கவலை. நாயனார்க்குக் குங்குலியம் வாங்க வழியில்லையே என்ற கவலை. தாலியோடு தெருவில் இறங்கி நடந்த நாயனார் எதிரே ஒரு வணிகன் தலையில் சாக்கு மூட்டையுடன் வந்தான். குங்குலியம் எனக் கூவிக்கொண்டே வந்தான். இறைவனே அவ்வாறு வந்தாரோ? "பொன் தந்தால் தருவீரோ?" என நாயனார் கேட்க வணிகர் தாலியைப் பெற்றுக்கொண்டு குங்குலிய முட்டையைக் கொடுத்தார். இறைவனுக்குக் குங்குலியம் கிடைக்கப் பெற்றேன் என நாயனார் அளவிலா மகிழ்ச்சி பெற்றார். கோவில் பண்டாரத்தில் குங்குலிய மூட்டையை ஒப்புவித்து இறைவன் திருமுன்பு குங்குலியத் தூபமிட்டு அயல் நினைவின்றி ஆண்டவன் நினைவிலேயே இறைவனார் திளைத்திருந்தார்.

**ஆறு செஞ்சடைமேல் வைத்த அங்கணர் பூசைக்கான**
**நாறு குங்குலியம் ஈதேல் நான் இன்று பெற்றேன் நல்ல**
**பேறு மற்றிதன் மேல் உண்டோ? பெறாப்பேறு**

என வணிகன் இடத்துக் குங்குலியம் கண்ட நாயனார் நெஞ்சம் பேறு இதன்மேல் உண்டோ என எண்ணியது. மனை, மனைவி, மக்கள், பசி, நெல் என எல்லாவற்றையும் மறந்தார். குங்குலியம் கொள்வதே குறிக்கோளாகத் தாலி தந்து அதைப் பெற்று ஆண்டவனுக்கு அர்ப்பணித்து அவனையே அவர் எண்ணியிருந்தார். அவர் அன்பு அத்தகையது.

"அயர்த்து எழும் அன்பு" எனச் சேக்கிழார் இதனைக் குறிப்பிடுகிறார். தன்னைத் தன் குடும்பத்தைத் தன் பசியை மறக்கச் செய்து, எல்லாவற்றையும் புறந்தள்ளி அயர்ந்து ஆண்டவன் பால் மட்டுமே வைத்த அன்பு நாயனராது அன்பு. அடியவர் தன்னை மறந்தார். ஆண்டவன் அவரை மறக்கவில்லை. அவரது இல்லத்தைக் குபேரன் வளமனை ஆக்கினான். செல்வம் நிறைந்து பொங்கியது.

நெல்லும் பிற தானியங்களும் மலையாய் நிறைந்தன. தன்னை மறந்து மயங்கியிருந்த அடியவரை ஆண்டவன் "சால நீ பசித்தாய், உன் மனையில் சென்று பால் சோறு உண்டு பருவரல் ஒழிக" எனத் தட்டி எழுப்பினான். ஆண்டவன் சொல் மறுக்க அஞ்சி மனை சென்ற நாயனார் அதிசயித்தார். அருள் எண்ணித் தொழுதார். அவர் மனை அடியவர்க்கு விருந்திடும் மனை ஆனது.

அடியவர் அன்பின் திறத்தை விளக்க இன்னொரு அற்புத நிகழ்ச்சியும் நிகழ்ந்தது. திருப்பனந்தாள் ஈசனுக்குத் தாடகை என்ற பெண் மாலையணிவித்து வழிபட முயற்சித்தாள். மாலையிடும் போது அவளது முன் தானை (சேலை) நழுவவே அவள் ஒருபுறமாகச் சாய்ந்தாள். சிவலிங்கமும் வளைந்து மாலையை ஏற்றுக்கொண்டது. மறுபடி சிவபெருமான் நிமரவில்லை. மன்னன் நூற்றுக்கணக்கான காவலர் யானை குதிரை ஆகியவற்றால் லிங்கத்தைக் கட்டி இழுக்கச் செய்தான். லிங்கம் நிமிரவில்லை. யானையும் குதிரையும் காவலரும் வீழ்ந்து எய்த்து இளைத்தனர். இதைக் கேள்விப்பட்ட குங்குலியக் கலய நாயனார் தன் கழுத்தில் கயிற்றைக் கட்டிக்கொண்டு மறுமுனையை லிங்கத் திருமேனியில் கட்டி இழுக்கத் தலைப்பட்டார். பிறரால் முடியாதது என்னால் முடியும் என நாயனார் தன் வலிமையால் நிமிர்ப்பேன் என எண்ணவில்லை. யானையும் குதிரையும் வீரரும் பட்ட துன்பத்தை யானும் படுகிறேன் என எண்ணினார். ஒன்று இறைவன் திருமேனி நிமிரட்டும் அல்லது என் உயிர் போகட்டும் என நாயனார் எண்ணினார்.

**நண்ணிய ஒருமை அன்பின் நார்உறு பாசத்தாலே**
**திண்ணிய தொண்டர் பூட்டி இளைத்தபின் திறம்பிநிற்க**
**ஒண்ணுமோ கலயனார்தம் ஒருப்பாடு கண்டபோதே**
**அண்ணலார் நேரே நின்றார் அமரரும் விசும்பில் ஆர்த்தார்**

மன்னன் வலிமையால் நிமிர்த்த எண்ணினான். இயலவில்லை. நாயனார் அன்பால் நிமிரச் செய்தார். அன்பு வென்றது. இறை நேர் நின்றது.



**Available Knitted Fabric** (On Order Basis)

| | |
|---|---|
| 18 GG Rib | Dia : 11 - 36 |
| 24 GG Single Jersey | Dia : 16 - 36 |
| 28 GG Single Jersey | Dia : 18 - 34 |
| 28 GG SJ Openwidth | Dia : 30 - 34 |

**Hosiery Yarn Available**

**PC / PV / 100 % COTTON / SLUB / VISCOSE**

***THE PARADISE KNITTERS***

2/311, Periyandipalayam Pirivu,
6th Cross, Hare Rama Hare Krishna Nagar
Mangalam Road, **TIRUPPUR - 641 687**
Mobile : 98652 04051 , 98651 22844 , 98422 70168

## விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் “திருநெல்லை”**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

கோவிலூர் – காரைக்குடி – 630 307.

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

தொலைபேசி : 04565 - 234 523 கைபேசி : 94434 42361

**பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:**

B.A., English
B.A., Tamil
B.Sc., Computer Science
B.Com.,
B.Com. (C.A).,
B.B.A.,
B.Sc., Maths
B.Sc., Visual Communication

திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!

**B.Sc. Visual Communication.,**

(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

2015–16 ஆம் ஆண்டிற்கான மாணவர் சேர்க்கை நடைபெறுகிறது.

விண்ணப்பங்கள் கிடைக்குமிடம் : நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி
கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளி
கோவிலூர்